

வீரமாமுனிவர் அருளிய

# திருக்குறள் இலத்தீன் மொழிபெயர்ப்பு

தமிழாக்கம் :

முனைவர் வி. மி. ஞானப்பிரகாசம், சே. ச.

வீரமாமுனிவர் தமிழ் ஆய்வுக் கழகம்
கருமாத்தூர்–626 514

வீரமாமுனிவர் அருளிய

# திருக்குறள் இலத்தீன் மொழிபெயர்ப்பு

[ ஐந்து அதிகாரங்கள் ]



தமிழாக்கம் :

முனைவர் வி. மி. ஞானப்பிரகாசம், சே. ச.

முதல்வர்

அருள் ஆனந்தர் கல்லூரி,

கருமாத்தூர் – 626 514



பதிப்பு *24 தை 2008*
*6—2—1977*



உ50 4 !

முனைவர் வி. மிக்கேல் ஞானப்பிரகாசம், சே. ச.
*(9—12—1922)*



பாத்திமா அச்சகம்
பாளையங்கோட்டை – 627 002

# பதிப்புரை



"வேத விழுப்பொருளை வெண்குறளால் வள்ளுவனார் ஓதவழுக் கற்ற துலகு" (திருவள்ளுவ மாலை 37) என்றார் மதுரைப் பெருமருதனார். உலகத்தோர் 'உள்ளிருள் நீக்கும் ஒளி'யாக மிளிர்வது திருக்குறள். திருவள்ளுவர் அருளிய திருக்குறள் 'உலகப் பொது மறை'யாகவும் பாராட்டப்படுகிறது. வள்ளுவர் வழங்கிய திருக்குறளாம் முப்பால் "என்றும் புலராது யாணர் நாட் செல்லுகினும் நின்றலர்ந்து தேன் பிலிற்றும் நீர்மை" நிறைந்தது.

"வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு"

என்று 'பாட்டுக்கொரு புலவர்' சி. சுப்பிரமணிய பாரதியார் பாடியது உண்மை; வெறும் புகழ்ச்சியில்லை.

திருக்குறளை உலகோர் அறியக் காட்டிய பெருமை கிறித்தவப் பெரியோரையே சாரும். 1730ஆம் ஆண்டில் வீரமாமுனிவர் (REV. FR CONSTANZO GIUSEPPE EUSEBIO BESCHI 1680-1747) இலத்தீன் மொழியில் அறத்துப்பால், பொருட்பால் ஆகிய இருபால்களையும் ஆக்கியருளினர். பின்பு 1856, 1865 ஆகிய ஆண்டுகளில் இருவர் இலத்தீன் மொழியில் பெயர்த்து எழுதியுள்ளனர்.

4

பிரெஞ்சு மொழியில் 1767ஆம் ஆண்டு பெயர் தெரியாத பெரியார் ஒருவர் திருக்குறளை மொழிபெயர்த்துள்ளதாகவும் அதுபற்றிய விவரம் (Bibliothique Nationale) பாரிசு நூலகத்தில் இருப்பதாகவும் E. ஏரியல் எழுதியுள்ளார். 1848இல் ஏரியல் என்னும் பிறிதொரு மேதை திருவள்ளுவரின் குறள் (Kural De Thiruvalluvar) என்னும் நூலை

நல்கியுள்ளார். இதுவரை பிரெஞ்சு மொழியில் மட்டும் ஒன்பது மொழி பெயர்ப்புகள் காட்சி தருகின்றன.

செருமானிய மொழியில் 1803ஆம் ஆண்டு A. F. காமர்சு திருக்குறளை மொழி பெயர்த்து தமிழ்ப் பாக்களுடன் வெளியிட்டுள்ளார். 1847, 1854 ஆகிய ஆண்டுகளில் மேலும் இரு மொழி பெயர்ப்புகள் செருமானிய மொழியில் எழுந்தன.

ஆங்கிலத்தில் 1794ஆம் ஆண்டு கின்னர்சுலி (Kinersley) திருவள்ளுவர் குறள் அல்லது அறிவுக் கடல் (Tiruvalluvar Kural or Ocean of Wisdom) என்னும் பெயரால் மொழிபெயர்த்துள்ளார். 1886ஆம் ஆண்டு சார்ச்சு யுக்ளோ போப்பு

(G. U. Pope) வெளியிட்ட திருக்குறள் மொழி பெயர்ப்பு விழுமிய சிறப்புடையதாக முழுமையுடன் திகழ்கிறது. ஏறத்தாழ இருபத்தைந்துக்கு மேற்பட்ட மொழி பெயர்ப்புகள் ஆங்கிலத்தில் மட்டும் அமைந்துள்ளன.

5

சோவியத்து உருசிய மொழியில் யூரி கிளாசோவு (Y. Yuriglazov) 1963ஆம் ஆண்டில் திருக்குறளை மொழி பெயர்த்தார். 1964ஆம் ஆண்டு பீசி மொழியிலும், பர்மிய மொழியிலும், மலே மொழியிலும் திருக்குறள் மொழிபெயர்க்கப்பட்டது. 1967இல் சீன மொழியிலும், 1968இல் இசுபானிய மொழியிலும் திருக்குறள் மொழிபெயர்ப்பு வெளிவந்ததாக அறிகிறோம். வடமொழியில் அப்பா வாசபேயரும், தெலுங்கு மொழியில் கனுபர்த்தி வேங்கடராம வித்யா நாத நாத்தும் பத்தொன்பதாம் நூற்றாண்டில் திருக்குறளைத் தந்துள்ளனர். 1924இல் கேமாநந்த இராகாதா அறத்துப்பாலையும்

பொருட்பாலையும் தோகா என்னும் பாவடிவில் வெளியிட்டார். இன்று வரை ஐந்து மொழி பெயர்ப்புகள் இந்தியில் வந்துள்ளன. வங்க மொழியில் 1939இல் நளினி மோகன் சன்யால் திருக்குறளை மொழி பெயர்த்தார். மராட்டியம், குசராத்தி, உருது, கன்னடம், மலையாளம் ஆகிய மொழிகளிலும் திருக்குறள் துலங்குகிறது.

வீரமாமுனிவர் இலத்தீனில் திருக்குறளை மொழி பெயர்த்த போது பல்வேறு குறிப்புக்களை வரைந்துள்ளார். தமிழ்ப்பெருமக்கள் முனிவருடைய உரையினை உணரும் வகையில் வீரமாமுனிவர் விழாக்குழுத் தலைவர் அருள்மிகு முனைவர் வி. மி. ஞானப்பிரகாசம் சே. ச. அடிகளார் ஐந்து அதிகாரங்களுக்குத்



தமிழாக்கம் செய்து தந்துள்ளனர். வீரமாமுனிவர்க்கு மூன்றாவது நூற்றாண்டு விழா நினைவாக நடத்தப்படும் விழாவில்

இந்நூலை வெளியிடுவதில் பெருமகிழ்வெய்துகிறோம். கருமாத்தூர் அருள் ஆனந்தர் கல்லூரி முதல்வராக அமைந்து, பல்வேறு பணிகளுக்கு இடையிலும் தமிழுக்கும் திருமறைக்கும் சிறந்த தொண்டாற்றி வரும் முனைவர் வி. மி. ஞானப்பிரகாசம் அடிகளாருக்கு நன்றி பாராட்டுகிறோம். இலத்தீன் பகுதிகளை ஒப்பிட்டு நோக்கிய தவத்திரு ம. சேவியர் அடைக்கலம், சே. ச. அடிகளாருக்கு எம் நெஞ்சார்ந்த நன்றி உரியது. வீரமாமுனிவர் மூன்றுவது நூற்றுண்டு விழாவை 1980ஆம் ஆண்டு சிறப்பாக நடத்தும்போது முழுமையாக இம்மொழி பெயர்ப்பு நூலை வெளியிட வேணவாக் கொண்டுள்ளோம்; எல்லாம் வல்ல இறைவன் நல்லருள் புரிவாராக.

பா. வளன் அரசு செயலாளர்
பாளையங்கோட்டை, வீரமாமுனிவர் மூன்றுவது நூற்றுண்டு



# MORALIA TIRUVALLUVENI

## அறப்பால் vel அறத்துப்பால்

## LIBER I DE VIRTUTIBUS

## PROLOGUS

**AMPLECTENS TRIA CAPITA QUORUM**

## CAPUT I

கடவுள் வாழ்த்து

**Dei Laus**

திருவள்ளுவனின் அறவுரைகள்

அறப்பால் அல்லது அறத்துப்பால்

முதற்பகுதி — நற்பண்புகள்

முன்னுரை

மூன்று அதிகாரங்கள் கொண்டது, அவற்றுள்

முதல் அதிகாரம்

இறைப்புகழ்

1 அகர முதல எழுத்தெல்லாம் ஆதி

பகவன் முதற்றே உலகு.

Litterae omnes caput habent literam A. Mundus caput habet Deum.

எல்லா எழுத்துகளும் 'அ' என்ற எழுத்திலிருந்து தொடங்குகின்றன. உலகம் கடவுளிடமிருந்து தொடங்குகின்றது.

2 கற்றதனால் ஆயபயன் என்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்.

Plurima didicisse quid amabo proderit, nisi verearis bonos ejus pedes, qui puram scientiam habet, idest, scientiam ab omni errore defaecatam.

8

தூய அறிவுடையவரின், அதாவது, எந்த விதப்பிழைகளும்
இல்லாமல் தூய்மையான அறிவுடையவரின் நல்ல அடிகளை நீ
வணங்காவிடில், நண்பனே, நீ பலவற்றைப் படிப்பதால் என்ன
பயன்?

3 மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்.

Qui adhaerent venerabilibus pedibus illius, qui supra flores graditur, in loco terrae superiori diu vivet. idest, qui veretur eum qui floribus vetustatem tribuit in caelo aeternum beabitur.

மலர்கள் மீது நடப்பவரின் வணக்கத்துக்குரிய அடிகளைப் பற்றிக்கொள்வோர், உலகுக்கு உயர்ந்த இடத்தில் நீண்ட காலம் வாழ்வர். அதாவது, மலர்களுக்கு அழகினை அளிப்பவரை வணங்குவோர் விண்ணில் என்றும் மகிழ்ந்திருப்பர்.

4 வேண்டுதல் வேண்டாமை இலானடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல.

Qui adhaeserit pedibus illius in quo cupiditas et aversio locum non habent, perpetuo ab hujus mundi malis immunis erit.

விருப்பமும் வெறுப்பும் இடம் பெறாதவரின் அடிகளைப் பற்றிக் கொள்கிறவர், இவ்வுலகத் தீமைகளிலிருந்து என்றுமே விடுபட்டு இருப்பர்.

5 இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.

Mala opera cum bonis mixta quae inducit falsa rerum apprehensio, non adhaerebunt ei qui concupiscit idem cum vera Dei notione connexam, id est, qui

9

veram habet Dei notionem plurimas falsas ideas corriget, ex quibus mala opera sequi solent et tantum modo quod bonum est sectabitur.

கடவுளைப் பற்றிய உண்மையான எண்ணத்துடன் தொடர்புடைய புகழை விரும்புகிறவனை, பொருட்களைத் தவறாகப் புரிந்துகொள்ளுதல் புகுத்தும் நல்வினை கலந்த தீவினைகள் ஒட்டிக் கொள்ளா. அதாவது, கடவுளைப்பற்றி உண்மை எண்ணம் கொண்டுள்ளவன், பல தவறான எண்ணங்களைத் திருத்துவான். இந்தத் தவறான எண்ணங்களிலிருந்து தீய செயல்கள் முளைக்கும்.

அங்ஙனம் திருத்திக் கொண்டவன் நல்லவற்றை மட்டுமே பின்பற்றுவான்.

6 பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க நெறிநின்றார் நீடுவாழ் வார்

Qui non aberrat a recto et errori non obnoxio tramite, id est, doctrina illius qui caret quinque iis affectionibus quae quinque sensuum via in animum irrepere solent, acternum beatus erit.

ஐந்து புலன்கள் வழியாக உள்ளத்தில் புகுந்து கொண்டிருக்கும் ஐந்து பற்றுதல்கள் இல்லாதவனுடைய நேரான, தவற்றிற்கு இடங்கொடாத நெறியிலிருந்து வில்காதவர் என்றும் மகிழ்ந்து இருப்பர்.

7 தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்

மனக்கவலை மாற்றல் அரிது.

Nisi adhaeseris pedibus illius, qui sibi similem non habet, difficile erit animi anxietatem sedare.

நமக்கு ஒப்பானவர் இல்லாதவரின் அடிகளை நீ பற்றிக் கொண்டாலொழிய, உன் உள்ளத்தின் கவலையைத் தணித்தல் கடினம்.

8 அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்தல் அரிது

Nisi adhaeseris pedibus illius qui mare virtutum est, difficile erit aliud mare quod extra illum est. (nempe, hoc miseriarum pelagus) trajicere.

அறத்தின் கடலாக இருப்பவரின் அடிகளை நீ பற்றிநு லொழிய, அக்கடலுக்கு வெளியே உள்ள பிறிதொரு கடலை (அதாவது இந்தத் துன்பக் கடலை)க் கடத்தல் கடினம்.

9 கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை

Nullius est emolumenti caput non venerans Deum, non secus ac sensus suum objectum non percipiens, (Caput non venerans Deum perinde est ac oculus caecus, auris surda)

தனக்குரிய பொருளை உணராத புலன்போல, கடவுளை வணங்காத தலை ஒரு பயனும் இல்லாதது.

(கடவுளை வணங்காத தலை காணாத கண்ணை, கேட்காத காதை ஒத்தது.)

10 பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார்.

Hoc vastum miseriarum pelagus in quo nati sumus ut illud tranemus, non tranabunt qui Dei pedibus non adhaerent

இப்பெரும் துன்பக் கடலை நீந்திக் கடக்க இதில் பிறந்துள்ள நாம் கடவுளின் காலடியைப் பற்றிக்கொள்ளாவிடில் அதை நீந்திக் கடக்கமாட்டோம்.

## CAPUT II

### வான்சிறப்பு
### Pluviam dantis coeli laus

*இரண்டாம் அதிகாரம்*
*மழை கொடுக்கும் வானத்தின் புகழ்*

1 வானின்று உலகம் வழங்கி வருதலால்
தானமிழ்தம் என்றுணரற் பாற்று.

Cum pluvia indeficienter pluens faciat mundum subsistere putandum est eam orbi esse

vitale pharma- cum. (Mundi subsistentia est hominum vita quac sine pluvia servari nequit.)

தவறாது பெய்யும் மழை உலகை வாழ வைப்பதால், அது உலகுக்கு உயிர்தரும் மருந்தெனக் கருதப்படல் வேண்டும். (உலகின் வாழ்வு மனிதனின் வாழ்வாகும். இது மழையின்றிக் காப்பாற்றப்பட இயலாது)

2 துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉம் மழை.

Pluvia non modo pluit ut comedentibus varia alimenta subministret, sed etiam ut ipsa comedentibus alimentum sit. (Pluviam namque aquam bibimus)

உண்பவர் களுக்குப் பல்வேறு உணவுப் பொருள்களை அளிப்பதற்காக மட்டும் மழை பெய்வதில்லை, உண்பவர் களுக்குத் தானே உணவாக இருக்கவும் பெய்கிறது. (ஏனெனில் மழையைத் தண்ணீராகக் குடிக்கிறோம்.)

3 விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்து
உண்ணின்று உடற்றும் பசி.

Si pluvia sistendo spem fallat, fames in mundo sistens vexabit vastam hanc terram quam mare alluit.

மழை பொழியாதாகி ஏமாற்றினால், உலகில் பஞ்சம் நிலைத்துக் கடல் சூழ்ந்த இந்த அகன்ற நிலத்தைத் தொல்லை செய்யும்.

4 ஏரின் உழாஅர் உழவர் புயலென்னும்
வாரி வளங்குன்றிக் கால்.

Neque agricolae bobus arabunt terram, si minuatur subsidium aquae quam dat pluvia.

மழையின் நீர்க்கொடை குறைந்தால், உழவர்கள் எருதுகளைக் கொண்டு நிலத்தை உழமாட்டார்கள்.

5 கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்
மற்றாங்கே
எடுப்பதூஉம் எல்லாம் மழை

Miseros facere et quos miseros fecit, iisdem favendo, iterum sublevare, id omne potest pluvia.

துயரத்துக்குள்ளாக்குவது,

துயரத்துக்குள்ளானவர்களுக்கு உதவி செய்து, மறுபடியும் உயர்த்துவது, இது எல்லாம் மழையால் முடியும்.

6 விசும்பின் துளிவீழின் அல்லால்மற் றாங்கே
பசும்புல் தலைகாண்பு அரிது

Nisi pluvia e nubibus ceciderit, tunc haud facile erit cernere virentis herbae filum.

மேகத்திலிருந்து மழை விழுந்தால் ஒழிய, பச்சைப் புல்பூண்டின் சிறு நுனியையும் காண்பது எளிதன்று.

## 13

7 நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும் தடிந்தெழிலி
தான்நல்கா தாகி விடின்.

Et ipsum spatiosum mare suam conditionem minuet si nubes illud minuendo illi

aquam nou dederint.
Maris conditio deficiente pluvia minuitur vel quia minus evadit, vel quia in eo non procreantur aquatica viventia, uniones et similia eo affluentia quae procreantur cum pluviae defectum non sentiunt. Nubes vero dicuntur mare minuere quia ex ejus vaporibus con- flantur.

மேகங்கள் கடலைக் குறைத்து அதற்கு நீர் தராவிடில், பரந்த கடலும் தன் தன்மையில் குறையும்.

மழை குறையக் கடலின் தன்மை குறையக் காரணம், ஒன்றில் அஃது அளவில் சிறியதாகின்றது. அல்லது, அதில் தோன்றும் நீர்வாழ்வனவும், முத்துகளும், இவை போன்று அதில் நிறைந்திருக்கும் பிற பொருள்களும் மழை நீர் குறைபட்டால் தோன்றுவதில்லை.

கடலிலிருந்து எழும் ஆவியினால் மேகங்கள் உருவாகின்றன. எனவே மேகங்கள் கடலைக் குறைப்பதாகக் கூறுகின்றோம்.

8 *சிறப்பொடு பூசனை செல்லாது வானம்*
*வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு.*

Et ipsis diis qui coelum exsiccant in hac terra non persolventur festivae solemnitates at

sacrificia.

வானம் வறண்டுபோனால் தெய்வங்களுக்கும் இந்த நிலத்தில் சிறப்பு விழாக்களும் பலிகளும் செலுத்தப்படமாட்டா.

14

9 தானம் தவம்இரண்டும் தங்கா வியன்உலகம் வானம் வழங்கா தெனின்.

Nou poterunt in hoc spatioso orbe morari elee- mosynae et poenitentia si pluvia desit.

மழை இல்லாவிடில், இரவலர்க்கு அளித்தலும் நோன்பும் இந்த விரிந்த உலகில் தங்க இயலா.

10 நீர்இன்று அமையாது உலகெனின் யார்யார்க்கும்

வான்இன்று அமையாது ஒழுக்கு.

Sine pluvia celsitudinem si nequit quis obtinere nec poterit quis, qualiscumque ille sit, (id est quantu- mvis celsus sit) absque pluvia obtinere ejusdem conser- vationem

Si pluvia desit, ob famem, quae inde

sequitur nec divitiae nec deliciae nec scientiae acquiri possunt et si acquisitae fuerint non possunt servari.

மழையின்றி ஒருவர் உயர்வுடைய இயலாதெனில், அவர், எத்தகையவராய் இருப்பினும் (அதாவது எத்துணை உயர்ந்த வராய் இருப்பினும்) மழையின்றி அவ்வுயர்வைக் காப்பாற்றவும் முடியாது.

மழை இல்லாவிடில், அங்குத் தொடர்ந்து வரும் பஞ்சத் தினால், செல்வம் இன்பம் அறிவு அடைய முடியாது. இவை அடையப் பெற்றிருந்தால், காப்பாற்றப்பட முடியாது.

## CAPUT III

### நீத்தார் பெருமை

### Religiosorum celsitudinis laus

1 *ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து*
*வேண்டும் பனுவல் துணிவு.*

Nulla ex scientiis dubitat concupiscere ut omnium maximum decus religiosorum a suo instituto non aberrantium.

தங்கள் வாழ்வு முறையிலிருந்து வழுவாத துறவியர் மாண்பினை யாவற்றிலும் மிகச் சிறந்ததாக

எந்த அறிவியல் துறையும் ஆர்வத்தோடு தேடத் தயங்குவதில்லை.

2 துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து
இறந்தாரை எண்ணிக்கொண் டற்று.

Si numeres religiosorum decora perinde erit ac si numeres mortuos ab initio mundi usque ad hunc diem. (Sensus est esse innumera)

துறவியரின் சிறப்புகளை எண்ணினால், அஃது உலகம் தோன்றியது முதல் இந்த நாள் வரை இறந்தவர்களை எண்ணுவதற்கு ஒப்பாகும். (துறவியரின் சிறப்புகள் எண்ணற்றவை என்பது இதன் பொருளாகும்.)

3 இருமை வகைதெரிந்து ஈண்டுஅறம் பூண்டார்
பெருமை பிறங்கிற்று உலகு

Considerando hujus et alterius vitae varias quali- tates, in mundo celsissimum erit decus illorum qui in hac vita ornantur virtute religiosorum propria.

இம்மை மறுமையின் பல்வேறு பண்புகளைக் கருதினால், துறவிகளுக்குரிய நற்பண்பினை இவ்வாழ்வில் அணிந்தவர்களின் மாண்பு உலகில் மிக உயர்ந்து விளங்கும்.

4 உரனென்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்

வரனென்னும் வைப்பிற்கோர் வித்து.

Qui harpagone qui dicitur animi robur suos quin- que sensus frenat semen est pro agro qui dicitur coelum. (Id est, qui utitur ad suorum sensuum frcnationem animi robore sicuti harpagone utimur ad frenandos elephantes, semen est in terra custoditum ut suo tempore in coeli agro seratur, hoc est coelum asse- quatur.

மன வலிமை எனப்படும் அடக்கும் கருவியால் தம் ஐந்து புலன்களை அடக்குபவர், வானகம் எனப்படும் வயலுக்கு வித்தாவார்.

அதாவது, யானைகளை அடக்க இரும்புக் கருவி ஒன்றை நாம் பயன்படுத்துவதுபோல், தம் புலன்களை அடக்க மன வலிமையைப் பயன்படுத்துபவர், தகுந்த காலத்தில் விண்ணில் பலன் தருவதற்காக (அதாவது, விண்ணை அடைந்துகொள் வதற்காக)

மண்ணில் வைத்து முடப்பெறும் விதையாவார்.

5 ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலுங் கரி.

Decus illius qui quinque affectus ex quinque sensi- bus emanantes extinxit id est mortificavit, pro se habet testimonium Indirenis coelitum regis.

Fabulantur sic quod Devendiren, qui et Indiren, vel ut alii dicunt, quidam nancuren dictus sub figura Devendirensis, maledictus fuit a quodam poenitente

17

Agastien dicto et statim sensit effectum maledictionis. Unde auctor evincere praesumit quod religiosi in ipsum regem deorum auctoritatem habeant.

தம் ஐம்புலன்களிலிருந்து புறப்படும் ஐந்து ஆசைகளை அவித்தவரின், அதாவது ஒறுத்தவரின் மாண்புக்கு, வானக அரசர் இந்திரனே சாட்சி;

இப்படி ஒரு கதை கூறுவார்கள்:— தேவேந்திரன், அல்லது இந்திரன், அல்லது வேறுசிலர் சொல்லுவது போல், தேவேந்திரன் வடிவத்தில் வந்த நங்கூரன் எனப்படுபவன், அகத்தியன் என்ற துறவியால் சபிக்கப்பட்டான். உடனே சாபத்தின் விளைவை உணர்ந்தான். இதிலிருந்து, துறவியர்களுக்குத் தெய்வங்களின் அரசர் மீதும் அதிகாரம் உண்டு என்று காட்ட ஆசிரியர் துணிகின்றார்.

6 *செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்*
*செயற்கரிய செய்கலா தார்.*

Sublimes tantum homines difficilia (uti est sua frenatio) operantur. Infimi homines ardua operari nequeunt.

உயர்ந்த மனிதர்கள் தாம் (தன்னடக்கம் போன்ற) கடினமானவற்றைச் செயல்படுத்துவர்; தாழ்ந்த மனிதர்கள் கடினமானவற்றைச் செயல்படுத்தல் இயலாது.

7 **சுவைஒளி ஊறுஓசை நாற்றமென்று ஐந்தின்**
**வகைதெரிவான் கட்டே உலகு.**

Qui quinque illa, nempe saporam, lucem,

quanti- tatem, sonum et odorem cum eorum proprietatibus ac relationibus attente considerat, totum in se mundum habet.

## 18

Id est mundum totum comprehendit. (Exaltat hic religiosos ob contemplationem quae mortificationem jungunt, quaque ex rerum naturalium attenta contemplatione veri notitiam assequendo ad Deum facilius diriguntur.)

சுவை, ஒளி, அளவு, ஒலி, மணம் என்ற ஐந்தையும் அவற்றின் பண்புகளோடும் தொடர்புகளோடும் கூர்ந்து கருதுகிறவன் உலகை முழுவதையும் தன்னிடம் கொண்டுள்ளான்.

அதாவது, உலக முழுவதையும் புரிந்து கொள்கிறான். (காட்சித் தியானத்தோடு தன் அடக்கத்தை இணைத்து, அக் காட்சித் தியானத்திலே இயற்கைப் பொருள்களைக் கூர்ந்து கருதி உண்மையின் அறிவைப் பெற்று, கடவுளிடம் எளிதில் செல்லுகின்ற துறவியரை இங்குப் புகழ்கின்றார்.)

8 *நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து*
*மறைமொழி காட்டி விடும்*

Decus hominum indeficientia verba

habentium (nempe religiosorum) ostendit spiritualis doctrina quam in terra docent.

(Ait verba religiosorum non deficere quia cui benedicunt felix est, cui maledicunt indubitanter infelix evadit.)

தவறாத சொற்களை உடையவர்களின் (அதாவது, துறவியரின்) மாண்பினை அவர்கள் உலகில் கற்பிக்கும் கொள்கை காட்டுகிறது.

(துறவியரின் சொற்கள் தவறா என்கிறார். ஏனெனில், துறவி யாரை வாழ்த்துகிறாரோ அவர் மகிழ்ந்திருக்கிறார்; யாரைப் பழிக்கின்றாரோ அவர் மகிழ்வின்றி வாழ்வார் என்பதும் உறுதி.)

## 19

9 குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயும் காத்தல் அரிது.

Neque unum temporis instans facile erit retardare effectus maledictionis illius qui virtutum montem ascendens in culmina perseverat.

நற்பண்புகளின் மலை மீது ஏறி அதன்
நிற்பவர் கூறும் சாபமொழியின் விளைவைக்
உச்சியில் நிலைத்து
கணநேரமும் தடை
செய்தல் எளிதன்று.

10 அந்தணர் என்போர் அறவோர்மற்
றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்.

Religiosi vocantur Andanar (quod est pulchre ornati) quia ornati incedunt affabilitate quae omnibus pulchra est.

துறவியர் அந்தணர் (அதாவது அழகாக அணி செய்யப் பட்டோர்) என்று அழைக்கப்படுவர். ஏனெனில், அவர்கள் எல்லோர்க்கும் இனியவராய்க் காட்சிக்கும், பேச்சுக்கும் எளிமை பூண்டு நடக்கின்றனர்.

## INTRODUCTIO AD OPUS

## CAPUT UNICUM

### அறன் வலியுறுத்தல்

### *ad virtutem sectandam hortatio*

### நூலுக்கு முன்னுரை

## முதல் அதிகாரம்
## அறத்தினைப் பின்பற்ற அறிவுரைத்தல்

1 சிறப்புஈனும் செல்வமும் ஈனும்
அறத்தினூஉங்கு
ஆக்கம் எவனோ உயிர்க்கு.

Quodnam est homini emolumentum virtute majus, quae aeternam et temporalem felicitatem parit.

மறுமைக்கும் இம்மைக்கும் மகிழ்ச்சியை ஈன்றெடுக்கும் அறத்தைவிட மனிதனுக்கு உயர்ந்த ஊதியம் எது?

2 அறத்தினூஉங்கு ஆக்கமும் இல்லை அதனை
மறத்தலின் ஊங்கில்லை கேடு.

Virtute majus emolumentum non est, nec majus damnum ejus oblivione.

அறத்தினைவிட உயர்ந்த ஊதியமும் இல்லை, அதனை மறத்தலை விடப் பெரிய இழப்பும் இல்லை.

3 ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே
செல்லும்வா யெல்லாஞ் செயல்.

Quocumque potes modo virtuosa opera sine intermissione, in omni occasione quae se offerat, operari debes.

அறச்செயல்களை, இயன்ற வழியில் எல்லாம், இடைவிடாமல், தானே அமையும் ஒவ்வொரு வாய்ப்பிலும் செய்தல் கடமை.

4 ***மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்துஅறன் ஆகுல நீர பிற,***

Ex immunitate a culpa in animo metienda est virtus. Caetera omnia conditionem habent strepitus.

Sensus est eam esse veram virtutem quae in animo culpam non admittit, nam animum culpa foedatum habentis verba et habitus et actiones ipsae quae virtutem spirant habent conditionem strepitus, tum quia ad id ordinari solent ut a coeteris videantur et audiantur, tum quia eo tantun tempore quo videntur et audiantur ut virtuosa laudantur, sed statim uti strepitus evanes- cunt.

உள்ளம் குற்றத்திலிருந்து விடுபட்டிருப்பதைக் கொண்டு அறம் கணிக்கப்படல் வேண்டும்.

மற்றவையெல்லாம் ஆரவாரத் தன்மை கொண்டவை.

இதன் பொருள்: உள்ளத்தில் குற்றத்திற்கு இடங் கொடாததுதான் உண்மையான அறம். ஏனெனில் குற்றத் தால் அழுக்கடைந்த உள்ளத்தை உடையவனின் சொற்களும் வழக்கங்களும், அறச் சார்புடைய செயல்களுங்கூட, ஆரவாரத் தன்மை கொண்டுள்ளன.

ஏனெனில், பிறர் பார்க்க வேண்டும், கேட்கவேண்டும் என்பதை நோக்கமாகக் கொண்டுள்ளன. மேலும், பார்க்கப் பட்ட, கேட்கப்பட்ட அந்த நேரத்தில்தான் அவை அறச் சார்புடையனவாகப் புகழப்படுகின்றன. ஆனால் உடனே, ஆரவாரம் அடங்குவது போல், மறைந்து போகின்றன.

22

5 அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா இயன்றது அறம்.

Virtutis proprietas est non errare in his quatuor nempe invidia, cupiditate, ira et malis verbis.

பொருமை, ஆசை, சினம், தீய சொற்கள் என்ற நான்கிலும் தவறுதிருப்பதே அறத்தின் பண்பாகும்.

6 அன்றறிவாம் என்னாது அறஞ்செய்க மற்றது
பொன்றுங்கால் பொன்றாத் துணை.

Ad mortis horam non differendo virtutem instanter operare, dum moriens illa tibi immortalis comes erit.

இறக்கும் நேரம் வரை தள்ளிப் போடாமல் உடனடியாக அறத்தைச் செய்க. நீ இறக்கும் பொழுது அறம் உனக்கு இறவாத துணையாக நிற்கும்.

7 அறத்தாறு இதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோடு ஊர்ந்தான் இடை.

Quonam modo se gerat virtus, ne multum scrutaris illud enim clare videre poteris in eo qui per bajulos in lectica defertur.

Quia sicut bajuli nunquam eum deserunt quem bajulant, ita virtus homini immortalis comes erit. Sed haec explicatio quamvis bona videatur, valde remota est a sensu litterali. Huic ergo accommo- datius dictum versum sic explicandum censeo: ex eo qui a bajulis in

lectica defertur, ne putes, hujusmodi esse virtutem. Id est ne putes virtutem eodem modo se gerere ac bajuli hominem in lectica bajulantes nam

23

isti neque ad sepulturam eum comitari possunt, virtus vero etiam post mortem hominem non deserit.

அறம் எவ்வாறு இயங்குகின்றது என்று நீ ஆழ்ந்து ஆராய வேண்டாம். ஏனெனில் பல்லக்குத் தூக்குவோரால் பல்லக்கில் தூக்கிச் செல்பவனிடம் அறம் இயங்கும் முறையைத் தெளிவாகக் காணலாம்.

ஏனெனில் பல்லக்குத் தூக்குவோர் தூக்கப்படுபவனை ஒருக்காலும் கைவிடுவதில்லை. அதுபோல் அறம் மனிதனுக்கு இறவாத தோழனாக இருக்கும். ஆனால் இந்த விளக்கம், நல்லதாகத் தோன்றினாலும், நேரடிப் பொருளுக்கு வெகு தொலைவில் உள்ளது. நேரான பொருளுக்கு இன்னும் பொருத்தமாக, மேற்சொன்ன வரிகள் பின்வருமாறு விளக்கப்படல் வேண்டும் என்று எண்ணுகிறேன்.

ஒருவன் பல்லக்குத் தூக்குவோரால் பல்லக்கில் தூக்கிச் செல்லப்படுவதை வைத்து, அறம் இவ்வாறு இயங்கும் என்று எண்ண வேண்டாம். அதாவது, பல்லக்குத் தூக்குவோர் ஒருவனைப் பல்லக்கில் தூக்கிச் செல்கின்ற அதே முறையில் அறமும் இயங்குகின்றது என் று நி னை க் க வேண்டாம். ஏனென்றால் அவர்கள் கல்லறை வரை கூட அவனுக்குத் துணையாகச் செல்ல இயலாது. அறமோ இறப்பிற்குப் பின்னும் ஒரு மனிதனைக் கைவிடுவதில்லை.

8 வாழ்நாள் படாஅமை நன்றாற்றின் அஃதொருவன்

**வாழ்நாள் வழியடைக்குங் கல்.**

Si nullum diem sine virtuosis operibus abire sinas, illa erunt velut, lapis occludens viam miserae vitae, quae mortem sequitur.

ஒரு நாளும் புண்ணியச் செயல் புரியாத நாளாகப் போகும் படி நீ விடாதிருந்தால், அப்புண்ணியச் செயல்கள் சாவுக் குப் பின் வரும் துயர வாழ்க்கைக்குச் செல்லும் வழியைத் தடுக்கும் கல்லைப்போல் இருக்கும்.

9 அறத்தான் வருவதே இன்பம்மற் றெல்லாம்
புறத்த புகழும் இல.

Virtute venit dulcedo. Coctera omnia nec dulcia nec laudabilia sunt.

நற்பண்பிலிருந்தே இனிமை வழிகிறது. மற்றவை யாவும் இனியவும் அல்ல; புகழத்தக்கனவும் அல்ல.

10 செயற்பால தோரும் அறனே ஒருவர்க்கு
உயற்பால தோரும் பழி.

Virtus est quam quisque sectari debet, vitium quod cuique vitandum.

நற்பண்புதான் ஒவ்வொருவரும் பின்பற்றவேண்டியது. தீமைதான் ஒவ்வொருவரும் விலக்க வேண்டியது.

## CAPUT UNICUM

### et ab anterioribus materiis avulsum

*தனித்தன்மை வாய்ந்த அதிகாரம். இதற்கு முந்திய அதிகாரங்களின் செய்திகளிலிருந்து வேறுபட்ட அதிகாரம்*

**ஊழ்**

Divinorun decretorum Irrefragabilitas

Ul proprie significat idem ac பழமை

antiquitas. Nil autem antiquius est divinis decretis quibus neminem obsistere posse Auctor contendit.

**தேவ திட்டம் முறியாத் தன்மை.**

ஊழ் என்பது தன்னிலேயே பழமை என்று பொருள்படும். தேவ திட்டத்திலும் பழமையானது வேறு ஒன்றுமில்லை. தேவ திட்டத்தை யாரும் எதிர்த்து நிற்க இயலாது என்பது ஆசிரியரின் உறுதியான கருத்து.

**1 ஆகூழால் தோன்றும் அசைவின்மை கைப்பொருள்**

**போகூழால் தோன்றும் மடி.**

Si divitias lucrandi statutum tempus adveniat, statim industriosus evadet. Si illas amittendi tempus adveniat, statim ad laborandum piger et ad divitias servandas ineptus evadet.

செல்வத்தைச் சேர்ப்பதற்குக் குறித்த காலம் ஒருவனுக்கு வந்துவிடின், அவன் சுறுசுறுப்பாளன் ஆகிவிடுவான்.

செல்வத்தை இழக்கும் காலம் வந்துவிடின், உடனே அவன் உழைக்காத சோம்பேறியாகி, செல்வத்தைப் பேணத் திறனற்றவன் ஆவான்.

**2 பேதைப்படுக்கும் இழவூழ் அறிவகற்றும்**

26

Quamvis valde doctus quis erit, Siei divitias amittendi statutum tempus adveniat, statim insipiens evadit. Quamvis valde insipiens quis sit, si divitias lucrandi statutum tempus advenerit, solers evadit.

ஒருவன் அறிவு மிக்கவனுயிருப்பினும், செல்வத்தை இழக் கும் குறிப்பி ட்ட காலம் வந்திடின், அவன் அறிவிலியாகின்ருன். ஒருவன் பெரிய பேதையாய் இருப்பினும், செல்வம் சேர்வதற் கான காலம் வந்திடின், அவன் திறமையுடையவன் ஆகின்ருன்.

3 நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றுந்தன்
உண்மை அறிவே மிகும்.

Licet quis multas ac subtiles scientias sui ingenii sublimitate didicent, insipientia quam affert divitias amittendi statutum tempus ejus ingenii sublimitatem superabit.

ஒருவன் தன் சொந்த அறிவு நுட்பத்தால், பல ஆழ்ந்த அறிவியல்களைக் கற்றிருப்பினும், செல்வத்தை

இழப்பிற்கென்று குறித்த காலத்தால் வரும் அறிவின்மை அவனது அறிவு நுட்பத்தை மேற்கொண்டு விடும்.

4 இருவேறு உலகத்து இயற்கை திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு.

Duplex in mundo proprietas, nempe divitem esse et sapientem valde latam differentiam patiuntur. Nam alia via quis dives evadit, alia sapiens. Sensus est non esse mirum si sapieus felix non sit quia licet illi sapientiam assequendi statutum tempus advenit, divitias lucrandi praefinitum tempus non pervenit.

செல்வராக இருத்தலும் அறிவாளியாக இருத்தலும் என்று உலகிடையுள்ள இரு பண்புகள் மிகுந்த வேறுபாட்டினைக்

கொண்டுள்ளன. ஏனெனில் ஒருவன் செல்வனாவது ஒரு வழி, அறிஞனாவது வேறொரு வழி. அதாவது அறிவாளி ஒருவன் ஆகூழ் (நற்பேறு) இல்லாமல் இருக்கலாம். இது வியப்பன்று. ஏனெனில் அவன் அறிவினை அடைவதற்கான நேரம் வந்து விட்டது என்றாலும் செல்வம் சேர்ப்பதற்கென்று முன் குறித்த நேரம் வந்து சேரவில்லை.

5 நல்லவை எல்லாஅந் தீயவாம் தீயவும்
நல்லவாம் செல்வம் செயற்கு.

Si divitias lucrandi statutum tempus adveneri,
omnes ad felicitatem et divitias attingendas ineptae
occasiones opportunae et aptae evadent. Si illud non, advenerit, omnes lucrandi opportunitates ineptae
evadent.

ஒருவனுக்குப் பொருள் சேரும் காலம் வந்து விட்டதென்றால் நற்பேற்றிற்கும் பொருள் ஈட்டுவதற்கும் ஏற்காத சமயங்களும் தகுதியுள்ள சமயங்களாய் மாறி விடுகின்றன. குறிப்பிட்ட அந்தக் காலம் வராவிடில், பொருளீட்டுவதற்கான எல்லா வாய்ப்புகளும் தகுதியற்றவையாகின்றன.

6 பரியினும் ஆகாவாம் பாலல்ல உய்த்துச்
சொரியினும் போகா தம.

Quod ex divino statuto non habet conditionem ut sit tuum, tuum non erit, quamis multum labores in eo custodiendo; quod ex divino statuto tuum esset etiamsi illud procul a te projicias a te procul non ibit.

தேவ ஏற்பாட்டின்படி உன்னுடையது என்று இல்லாத ஒன்று, நீ அதைக் காப்பாற்ற எவ்வளவு உழைத்தாலும், உன்னுடையதாக இராது. தேவ ஏற்பாட்டின்படி உன்னுடைய தாக இருக்கவேண்டியது, நீ அதை உன்னை விட்டுத் தொலைவில் எறிந்தாலும், உன்னை விட்டு அகன்று போகாது.



7 வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது.

Etiamsi immensas divitias cumulaveris non erit tibi possibile iis frui supra mensuram quam Deus tibi praefinivit.

நீ மாபெருமளவு செல்வத்தைச் சேர்த்து வைத்திருப்பினும், கடவுள் முன் குறித்த அளவைக் கடந்து நீ அதைச் சுவைத்தல் இயலாது.

8 *துறப்பார்மன் துப்புரவு இல்லார் உறற்பால*
*ஊட்டா கழியு மெனின்.*

Etiamsi qui pauperrimi sunt non concipiunt propositum renunciandi omnibus, nisi Deus avertat impedimenta quae adesse statuit. Sensus est nec bona proposita quamvis facillima concipi posse sine Dei praefinitione.

கடவுள் தாம் ஏற்படுத்திய இடையூறுகளை விலக்கினு லொழிய, பரம ஏழையாய் இருப்பவர்களும் எல்லாவற்றையும் துறக்கும் திட்டத்தை எண்ணமாட்டார்கள். அதாவது, நல்ல திட்டங்களும், எத்துணை எளிய திட்டங்களாய் இருப்பினும், கடவுளின் முன் ஏற்பாடின்றி, சிந்தனையில் தோன்றுதலும் இயலாது.

9 *நன்றுங்கால் நல்லவாக் காண்பவர்*
*அன்றுங்கால்*
*அல்லற் படுவ தெவன்.*

Si scis quod tu cupis fieri non posse nisi ad id praefinitum tempus advenerit, quod illud non fit, quare quaeso tristaris?

குறிக்கப்பெற்ற நேரம் வரும் வரை, நீ விரும்புவது நிகழ்தல் இயலாது என்று நீ அறிந்திருந்தால், அது நிகழாத போது ஏன் வருந்துகிறாய்?

29

10 ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினும் தான்முந் துறும்.

Quidquid excogitaveris ut divina decreta retardes, illa semper tuas industrias omnes praeibunt; quid igitur in mundo divinis decretis potentius?

தேவ திட்டங்களைப் பின்வாங்கச் செய்ய நீ என்னதான் திட்டமிட்டாலும், அவை எப்பொழுதும் உன் முயற்சிகள் அனைத்தையும் முந்தி விடும். எனவே தேவ திட்டங்களை விட வலிமை உள்ளது எது?

Non me latet vocem ஊழ் cui ego divinorum decretorum significationem tribuo ab aliis usurpari pro bala vinai' 'பழ வினை' quod significat opera antiquitus facta, neque ignoro eosdem humanarum rerum vim tribueri operibus antiquitus factis, sive bonis

sive malis pro effectuum diversitate, dicunt enim vinum probum pauperem esse ob peccata quac antiquitus patravit, sive antequam nasceretur in alia generatione, uti Tamulenses stulti putant, sive postquam natus est v. g. in adolescentia vel pueritia, quaeque adhuc non luit ferendo supplicium iis debitum

Virum vero improbum felicem esse ob virtutes quas antiquitus exercuit et pro quibus adhuc praemium iis debitum non retulit, atque eodem modo virum industrium ac indefesse laborantem pro divitiis acqui- rendis nil acquirere in poenam peccatorum veterum, virum vero omnino iniquum atque pigrem sine ullo labore divitem evadere in praemium veterum virtutum. ita ut quidquid vulgus malam fortunam aut bonam fortunam appellat, id ipsi refundant in opera antiquitus facta.

30

In hoc vero capitulo dictam vocem ul

melius explicari et proprius significare divina decreta patet tum ex serie tota sententiarum in hoc capitulo contentarum tum ex illo versu speciatim:

வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது.

in quo ne per somnium quidem auctor meminit divini statuti quod nemo praeterire potest: Et quam detur, quod opera antiquitus facta suum locum habearit in humanorum rerum viribus, quarum causa ignoramus, cum tamen dicta opera antiquitus facta sive bona sive mala hic et nunc et non antea neque postea suum sortiri effectum sive bonum sive malum, non dependent nisi a divina voluntate, quae statuit tempus in quo alicujus virtus praemiari, peccatum puniri debeat, recte voci ul divinorum decretorum significatio tributa fuit, cum omnis vis operum antiquitus factorum ad divinorum decretorum virtuti praemium, peccato poenam statuentium irrefragabilitatem reducatur, eo vel magis quod vox ul ex sua

natura nil significat nisi
antiquum quid, quod aequc competit operibus antiqui- tut factis, quorum vim nunc quis experitur, ac divino decreto decernenti ut dicta opera nunc suam vim exercent (nam nil est divinis decretis antiquius)

நான் தேவ திட்டங்கள் என்று பொருள்கூறும் 'ஊழ்' என்ற சொல்லை, மற்றவர்கள் 'பழ வினை' அதாவது முன்னால் செய்த செயல்கள் என்ற பொருளில் பயன்படுத்துகிறார்கள் என்பதை அறிவேன். மனித வாழ்வில் ஏற்படும் நிகழ்ச்சிகளுக்குக் காரணம் முன்னால் செய்யப்பட்ட செயல்களே என்று



விளைவுகளின் வேறுபாட்டைக் கொண்டு நல்லவை, தீயவை எனப்படும் செயல்களேயென்று கூறுகின்றார்கள் என்பதையும் நான் அறியாமல் இல்லை.

நல்லவன் தான் முன்னால் செய்த பாவங்களின் பொருட்டு ஏழையாய் இருக்கிறானாம். இப்பாவங்களை அவன் இங்குப் பிறப்ப தற்கு முன் வேறொரு பிறப்பில் செய்தான் என்று சிலர் தவறாக நினைக்கின்றனர். அல்லது பிறப்புக்குப் பின் சிறுவனாகவோ இளைஞனாகவோ இருந்த

போது செய்தான் என்றும் அவற்றிற் குரிய தண்டனையை ஏற்றுக் கழுவாய் நிறைவேற்றவில்லை என்றும் கருதுவர்.

தீயவஞே எனில் தான் முற்காலத்தில் செய்துவந்த நற் செயல்களின் பொருட்டு மகிழ்ச்சியாக வாழ்கிருன். ஏனெனில் அவற்றிற்குரிய பரிசினை அவன் இன்னும் பெறவில்லையாம்.

இதே முறையில், முயற்சியுள்ள மனிதன், செல்வம் சேர்க்க இடையருது உழைக்கிறவன் ஒன்றும் சேர்ப்பதில்லை. இது அவன் பழைய பாவங்களுக்குத் தண்டனையாம். ஆனுல் ஒருவன் முற்றிலும் கெட்டவன், சோம்பேறி சிறிதும் உழைக்காமல் செல்வன் ஆகின்ருன். இது அவன் பழைய நற்செயல்களுக்குப் பரிசு என்பர்.

இங்ஙனம், நற்பேறு என்றும் துற்பேறு என்றும் பொதுவாக அழைக்கப்படுவதை இவர்கள், முன்னுல் செய்து செயல்கள் மேல் ஏற்றிக் கூறுகின்றனர்.

இந்த அதிகாரத்தில், மேற் கூறிய 'ஊழ்' என்ற சொல்லை, தேவ கட்டளை என்று விளக்குவதே மற்ற விளக்கங்களை விடச் சிறந்தது. இதுவே மற்றப் பொருள்களை விட அதற்குப் பொருத்தமான பொருளாகும். இவ்வுன்மை இவ்வதிகாரம் முழுவதும் அடங்கியுள்ள கருத்துகளின் தொடர்ச்சியினுலும், குறிப்பாக,

**வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி**
**தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது**



என்ற குறளினுலும் தெளிவாகும். இந்தக் குறளில், முன்னுல் செய்த செயல்களை ஆசிரியர் கனவில் கூட நினைக்கவில்லை. ஆனுல் யாரும் மீறலாகாத தேவ கட்டளையையே நினைக்கின்ருர்.

காரணம் தெரியாத வாழ்க்கை நிகழ்ச்சிகளில் முன்னுல்
செய்த செயல்கள் ஆதிக்கம் செலுத்துகின்றன என்று வைத்துக் கொண்டாலுமே அச்செயல்கள் — அவை நல்லவையோ தியவையோ — தங்களுக்குரிய நல்ல அல்லது தீய விளைவை அடைவது, இங்கு இப்பொழுது, இதற்கு முன்னுமன்று, இதற்குப் பின்னுமன்று என்பது, தேவ திருவுள்ளத்தையே சார்ந்தது. ஒருவனுடைய நற்செயல் பரிசு பெறவும் தீச்செயல் தண்டனை பெறவும் வேண்டிய நேரத்தைத் தீர்மானிப்பது அந்தத் தேவ திருவுள்ளம்தான். எனவே ஊழ் என்ற வார்த்தைக்குத் தேவ கட்டளை என்ற பொருள் கொடுக்கப்பட்டது சரியே.

ஏனெனில் முன்னுல் செய்த செயல்களின் ஆற்றல் என்பது புண்ணியத்திற்குப் பரிசும் பாவத்திற்குத் தண்டனையும் முடிவு செய்கின்ற தேவ கட்டளைகளின் மீற முடியாமையில் அடங்கும். மேலும் ஊழ் என்ற சொல், இயல்பாக, பழையது என்பதைத்

தான் குறிப்பிடுகிறது வேறொன்றையும் அல்ல. பழையது என்பது, முன்னால் செய்யப்பட்டு இப்பொழுது ஒருவரால் பலன் அநுபவிக்கப்படும் செயல்களுக்கும் முற்கூறிய செயல்கள் தாங்கள் வலிமையை — ஆற்றலைச் செலுத்த வேண்டுமென முடிவு செய்யும் தேவ கட்டளைக்கும் ஒரே அளவில் பொருந்தும். (ஏனெனில் தேவ கட்டளையிலும் பழையது ஒன்றுமில்லை.)

## திருவள்ளுவர் பெருமை

"இருளிராவிடத்து விளங்கிய ஒரு மீன் போலவும், பாலைச் சுரத்து அரிது அலர்ந்த பதுமம் போலவும், மெய்யாஞ் சுருதி விளக்காது இருளே மொய்த்த நாட்டின் கண்ணும் கடவுளேற்றிய ஞானத் திருவிளக்கு எறிப்பத் தெளிந்து ... ங்கும் ஒரு விளக்கென நின்றுயர்ந்த திருவள்ளுவர்."

